

கருணாதேவியின் அருளால் காலனை வணங்கி

கணவனைக்காத்த

# கற்பின் சாவித்திரி

காவடிசிந்து, கும்மிசிந்து, அலங்காரசிந்து.

இஃது.

ம-ா-ா-ஸ்ரீ, வித்வான்,

கவிராஜ கந்தசாமி பிள்ளை அவர்களால்

இயற்றப்பட்டு,

நாகப்பட்டணம், ஆறுமுக முதலியார் குமாரர்

என். கணபதி முதலியா ரவர்களால்

சென்னை:

மாணிக்க விலாசம் பிரஸில் பதிப்பித்தது.

ரிஜிஸ்டர் காபிரைட்] 1918 [விலை அணா 2.

உ

காலனை வணங்கி கணவனைக் காத்த கற்பின்

# சாவித்திரி காவடிச்சிந்து

## கும்மிச்சிந்து அலங்காரச்சிந்து

இவை-மூன்றும், அடங்கி யிருக்கின்றன.



ம-௱-௱-ஸ்ரீ, வித்வான், கவிராஜ கந்தசாமி பிள்ளை
அவர்களால் இயற்றப்பட்டு,

நாகப்பட்டணம், ஆறுமுக முதலியார் குமாரர்
என். கணபதி முதலியா ரவர்களால்
சென்னை-மாணிக்க விலாசம் பிரஸில் பதிப்பிக்கப்பெற்றது.

ரிஜிஸ்டர் காபிரைட்] 1918 [விலை அணா 2.

கணபதி துணை

# ரிஜிஸ்தர் செய்யப்பட்டது





## அறிவிப்பு

இதனால் சகலமானவர்களுக்கும் தெரிவிப்பது யாதெனில் காலனை வணங்கி கணவனைக்காத்த கற்பின் சாவித்திரி, காவடிச் சிந்து, கும்மிச்சிந்து, அலங்காரச்சிந்து இவை மூன்றும் அடங்கிய புத்தகத்தை ம-ா-ா-ஸ்ரீ, வித்வான் கவிராஜ கந்தசாமிபிள்ளை அவர்களால், எழுதினதை என். கணபதி முதலியாராகிய எனக்கு சகல சுதந்திரம் கொடுத்து விட்டபடியால், இதை என் அனுமதியில்லாமல் இதரமானவர் எவ்விதத்திலாகிலும் அச்சிடலாகாதென கனம் பொருந்திய கெவர்ன்மெண்டார் சட்டப்படிக்கு ரிஜிஸ்டர் செய்திருப்பதை யாராகிலும் அச்சிடுவாராகில் நான் கோரிய நஷ்டங்களை கனம் பொருந்திய கெவர்ன்மெண்டார் சட்டப்படிக்கு வசூல் செய்யப்படும்.

இப்படிக்கு,

நாகப்பட்டணம்-கணபதி முதலியார்.



உ

வேலுமயிலுந் துணை.

காலனை வணங்கி கணவனைக் காத்த கற்பின்

# சாவித்திரி காவடிச்சிந்து

## கும்மிச்சிந்து வர்ணமெட்டு.

விநாயகர் துதி வெண்பா.

தாரணியோர் கொண்டாடுஞ் சாவித்திரி சரித்திரத்தை
சீரணியுங்காதையினைச் செப்பவே—வாரணனூர்
மாட்சியுடனளும் வழுவாத வாங்குதவி
காட்சி தருவான் களித்து.

கும்மியடிபெண்கள் கும்மியடி-உங்கள்
கொண்டை குலுங்கவே கும்மியடி
நம்மையாளுங் கந்தசாமியை
நாடி கும்மியடியுங்கடி (கு)

கலங்கபுரத்தில் அரசாக்ஷி செய்யும்
கஜகேது வென்கிற மன்னவனும்
பலத்தில் தளத்தில் சினத்தில் மிகுந்த
பாவியென்றெங்கும் பெயர் படைத்தோன் (கு)

தனக்குள்ளடங்கிய சிற்றரசர்களை
தண்டித்து இம்சை புரிந்திடுவான்
தனக்கு நிகரில்லை யென்று கர்வித்திடும்
சண்டாள மன்னன் கஜகேது (கு)

அவனுக்கடங்கிய சிற்றரசர்களில்
அஞ்சா துயுமத்சேன ராஜன்
கவனமில்லா தவ்வருட கப்பமதை
கட்டாத தாலே சினமடைந்து (கு)

சேனாபதியை யருகழைத்து-த்யுமத்
சேனனிடம் கப்பம் கேட்பா யென்ன
கோனே யவன் மகன் சத்யவந்தனாலே
கொடுக்கே னென்றேனையா வென்றுரைத்தான் (கு)

சத்தியவந்தன் சமர்த்தை புகலவே
தாரணியோராலே யாகாது
எத்திசை மன்னரும் வந்து வளைத்தாலும்
எள்ளளவேனும் மனந்தளரான் (கு)

வில்லுக் கருச்சுனன் சொல்லுக் கரிச்சந்திரன்
விஜய பராக்கிரம தீரனைய்யா
மல்லுக் கஞ்சாத மகனிருப்ப தாலே
மாநிலத்தோர்க் கவனஞ்சானே (கு)

சத்தியவந்தனைப் பெற்ற த்யுமத்சேனன்
தந்திடேனென்கிறான் கப்பமதை
இத்ததி சத்தியவந்தன் மணிபுரம்
ஏகியிருக்கின்றா னகையினால் (கு)

ஆனை சேனை பரிவாரத்துடனே நாம்
அதி வேகமாய் சாலவ புரியில
சேனையுடன் சென்று யுத்தம் புரிந்து
ஜெயித்திடுவோம் த்யுமத்சேனனை (கு)

அந்நகரத்தையும் கொள்ளையிட்டு-அவன்
ஆனை சேனை பரிவாரங்களை
சின்ன பின்னமாக செய்து அவன் கோட்டையில்
ஜெயக்கொடி நாட்டுவோ மென்றுரைத்தான் ()

சொல்லி வாய்மூடுமுன் பாவி கஜகேது
சேனா சைன்னிய கூட்டத்துடன்
வல்லமை யாகவே சாலவபுரியில்
வந்து விட்டானவன் போர்புரிய (கு)

பேரிகை டங்கர முழங்குவதும் ரண
பேரியின் சப்த முழங்குவதும்
பேரிரைச்சலாக சண்டையின் சப்தம்
வீரா வேசமாய் முழக்கினார்கள் (கு)

அச்சமயத்தில் த்யும்த்சேனன்
ஆஹாயென் மந்திரிகளே யிதென்ன
இச்சமயத்தில் சண்டையின் காரணம்
சப்த ரணபேரி கேட்பதென்ன (கு)

யுத்த நிருபமுங்காணவில்லை ஒரு
யுக்தி தந்திரமும் செய்யவில்லை
எத்தாக நம்மை ஜெயிப்பதற்காகவே
எந்தப் பகைவனோ வந்து விட்டான் (கு)

சேனாபதியை யழைத்திடுவீர்-நீர்
சேனைகளை யெல்லாஞ் சேர்த்திடுவீர்
நானாவிதமாக பகைவர் சேனையை
நாசப்படுத்தி துரத்திடுவோம் (கு)

என்றிவர் யோசனைசெய்திருக்க—அரசன்
எதிரில் சேனாபதி வந்து நின்று
மன்னன் கஜகேது சண்டைக்கு வந்து
வளைத்துக் கொண்டானையா கோட்டைதனை ()

சத்திய வந்தனை தானழைக்க-ஒரு
உத்தம தூதனை நீரனுப்பி.
இத்ததி வந்திட செய்துவீ ராமாகில்
சத்ருக்களை யதஞ்செய்வோம் (கு)

என்று சேனாபதி தானுரைக்க—அங்கு
எதிரிலிருந்த சுமாலி தனை
அன்றே மணிபுரந் தானனுப்பி—சத்ய
வந்தனை யழைத்து வந்திடென்றான் (கு)

அமரது செய்திட்டா ரிருபடை வீரரும்
அதி வீரமாகவே மூன்று நாளாய்
எமதூதர்கள் போலவே கஜகேது சேனைகள்
எல்லோரையும் வென்றார் தீரமுடன் (கு)

சேனைகளெல்லாம் ஜெயமடைய—கெஜ
கேதும் சினமாய் கோட்டையேகி
தானே துயுமத்சேனன் பத்மாக்ஷியை
தவறாமல் கைப்பற்றி வாருமென்றான் (கு)

மன்னனுரைத்த மொழிப்படியே—பொல்லா
மாவீரர்சென்று இருவரையும்
துன்மனதாகப் பிணைத்துக்கட்டியந்த
துன்மார்க்கன் முனனே கொண்டு வந்தான் (()

மன்னன் துயுமத்சேனனும் பத்மாக்ஷி
மனது மெலிந்து சினமுடனே
அன்னீதஞ் செய்தாயே பாவிகெஜகேது
அரசர்க்கடுக்காத துன்பஞ் செய்தாய் (கு)

யுத்த நிரூபம் அனுப்பாமல்—ஒரு
யோசனை என்னிடம் கேட்காமல்
சத்தியவந்தனு மில்லாத வேளையில்
சண்டைக்கு வந்தாயே மாபாவி (ரு)

சண்டைசெய்து நகர் கைக்கொண்டாலும்—இந்த
சதிமோசஞ் செய்லாமோ மாபாவி
பண்டை யரசர்களிவ்விதஞ் செய்தாரோ
பகருவாய் துர்க்குண மாபாவி (ரு)

கட்டின கட்டை யவிழ்த்துவிடு யாங்கள்
கானகமேரி பிழைத்திடுவோம்
வெட்டினாலும் ரெண்டு துண்டாக வெட்டிடு
வேதனை செய்யா தடாத்துரோகி (கு)

எனறிவர் சொலலி யழுதிடும் வேளையில்
எள்ளளவேனும் மனமிரங்கா
நன்றியறியா கஜகேது வீரரை
தாற்புரந் தன்னிலுந் தானிருத்தி (கு)

மன்னன் துயுமத்சேனவனுடன்—அவன்
மனைவி பத்மாக்ஷி தன்னையுமே
அன்னிதமாகவே காட்டிற்கொண்டுவந்து
அநியாய தண்டனை செய்யலுற்றான் (கு)

திருப்புகழ்-சந்தம்.

மந்திரி சாலவபுரியரசன் திறை
தந்திடாமலே தொந்தரை செய்ததால்
இந்தவேளையி லவனுடன் போர்செய்து வென்றோமே 1

இன்று சாலவபுரி நமக்கானது
சென்று கோட்டையில் நம்மிட சேனைகள்
நின்று காவல் புரிந்திட செய்வாய்—திடமாக 2

சத்யவந்தனும் வந்திடுவானாகில்
யுத்தம்புரிந்தினி யவனையும் பற்றியே
இத்ததியிங்கு கொணருவீர் சீக்கிரம்—அறிவீரே 3

சீக்கிரமிவர்களின் நேத்திர மிரண்டையும்
போக்கியே படை வீரருடன் நகர்
நோக்கியே வருவீரென புகன்றனன்—மாபாவி 4

ஆக்கினைப்படி அவர்களின் கண்களை
போக்கினார்க ளவ்வேளையில் சதிபதி
பார்க்கும் விழிகளிழந்தனரையோ பரிதாபம் 5

கும்மிச்சிந்து.

க்ஷாத்திரமாக கொடுமைகள் செய்த
சண்டாளனன் கஜகேது
நேத்திரம் போக்கியே காட்டில் விடுத்தானே
நேமியிலிவ்விதஞாயமாமோ (கு)

துஷ்டவரசன் சொற்கேட்டு—அந்த
துரோகிகள் கண்ணை பிடுங்கி விட்டார்
கஷ்டமாயவர்கள் துக்கித்தழுது
கானகவாசிக ளாயிருந்தார் (கு)

மன்னன் துயுமத்சேனனுடன்—அந்த
மங்கை பத்மாக்ஷி யானவளும்
துன்பஞ்சகியாமல் துக்கித்தழுதிட
துரோகி கஜகேது செய்து விட்டான் (கு)

கண்ணிழந்திவர்கள் கதறியழுதிட
காட்டில்வாழ் பக்ஷி மிருகங்களும்
எண்ணுதுமெண்ணி இவர்களைப்பார்த்து
என்செய்வதென்று அழுதிடுமாம் (கு)

பறவைகளெல்லாந் துணையாச்சு—அந்த
பத்மாக்ஷி துயுமத்சேனனுக்கு
உறவினர் போலே கனிவர்க்கங்கொணர்ந்து
உண்டு பசியாற செய்ததுவாம் (கு)

பக்ஷிகள் செய்யும் உபகாரங்—கண்டு
பத்மாக்ஷி துயுமத்சேனனுந்தான்
இச்சமயத்தி லெங்களைப் பெற்றோர்கள்
இந்தப்பறவைக ளென்றுரைத்தார் (கு)

இவ்விதமாக இவர்களிருக்கையில்
ஏகி சுமாலி சத்யவந்தனை
ஒவ்வியழைத்து வருகையிலே யிவன்
உண்மைக ளென்றுமே சொல்லவில்லை (கு)

சத்தியவந்தன் சுமாலியிருவரும்
சந்தோஷமாக வருகையிலே
மத்ராபுரி நந்தவனத்தைக்கண்டு
மகிழ்ந்திருந் தன்பாய் களைதெளிய (கு)

நடந்துவந்த விடாய்தணிய—இங்கு
நல்லஜலமுண்டு செல்வோமென்று
தடாகத்தை தேடி சுமாலி சென்று விட்டான்
சத்யவந்தன் தனியாயிருந்தான் (கு)

சகிகளுடனே சாவித்திரியம்மனும்
சந்தோஷமாக நந்தவனத்தில்
மகிழுடனே வந்து விளையாடும் வேளையில்
மாரன் கணையால் மதிமயங்கி (கு)

காந்தனுடனே கீதங்கள்பாடி
களிப்புற்றிருக்கின்ற வேளையிலே
நேசமுடன் சத்தியவந்தன் சிங்காரமாய்
நிற்பதைப்பார்த்தவள் யோசிக்கின்றாள் (கு)

எந்த தேசத்தின் மன்னவனோ—இவர்
இந்திரனோ சந்திரனோ மன்மதனோ
சுந்தரலங்கார கந்தவேளோ—இவர்
சந்தோஷமாய்வந்து காக்ஷி தந்தார் (கு)

என்று சாவித்திரி காதல்வகித்து
எண்ணாது பெண்ணியே சிந்திகையில்
அனறைய பொழுது போக்க சத்யவந்தன
அவ்வனத்தை சுற்றிப்பார்த்திருந்த ன் (கு)

சாவித்திரி தேவியை தான்புசிக்க ஒரு
சிங்கம் வருகையிலம்மாது
கூவிதிடுக்கிட்டு ஓடியே வந்தாள்
கொன்றான் சிங்கத்தை சத்தியவந்தன் (கு)

நடந்து வந்த களைதான்தெளிய —அந்த
நந்தவனத்தில் சயனித்திட
தொடர்ந்து சாவித்திரியாலொன்றுமே
தோற்றாமல் ஆலோசனை புரிநதிடலானாள் (கு)

யாரையா நீரெந்ததேசமையா—நீர்
யாது காரணமாக இங்கு வந்தாய்
கூரையா உமிட பேரென்ன ஊரென்ன
குலமென்ன யெனறிவள் கேட்கலானாள் (கு)

சாவித்ரிமாது கேட்டவுடனந்த
சத்தியவானுமே சொல்லுகின்றான்
ஆவித்துணையான பெண்மணியே யானும்
அடுத்த சாலவபுரிதேசம் (கு)

நீ என்னகாரணமாக வந்தாய்—பெண்ணே
நிக்ஷயமாகவே சொல்லவேண்டும்
தாயின்பேர் தந்தைபேர் என்ன உந்தனுக்கு
தற்சமய மணமான துண்டோ (கு)

சொல்லுவா யென்றிவன் கேட்கையிலே அந்த
சொர்ன வடிவுள்ள சாவித்திரி
நல்லவர் சூழும் மத்ராபுரி தேசம்
நங்கை யென்பேரும் சாவித்திரி (கு)

அன்னையோ மாலவி அஸ்வபதி தந்தை
ஆகவில்லை மணமெந்தனுக்கு
நன்னயமாகவே சத்தியவந்தனை
நானே மணப்பதற்காசித்தேன் (கு)

சத்தியவந்தனும் நான்தானே பெண்ணே
சாலவதேச மெங்கள் நாடு
பத்மாக்ஷி யென்தாய் த்யுமத்சேனன் தந்தை
பக்ஷமுடன் கவனிப்பாய் நீ (கு)

அப்படியானா லுத்தமமே யாகும்
அன்புடனுமும் மணம்புரிய
ஒப்புக்கொள்ளுவோ மிருபேரும் இனி
ஊருக்குச் செலவோம் வருவீரே (கு)

பெற்றோரறியாமல் யான் மணஞ்செய்யேனே
பிரிய சவுந்தரி யானவளே
அற்ப மானதல்ல க்ஷத்ரிய குலந்தான்
அப்பாலே வந்து மணம் புரிவேன் (கு)

என்றிவன் சொல்லி சுமாலியுடனே
ஏகினான் கானக மார்க்கமாக
நன்றென்று சாவித்திரி தோழிகளுடனே
நடந்தாள் கன்யாமடந்தேடி (கு)

கானக மார்க்கமாய் சத்தியவந்தனும்
சந்தோஷமாக வருகையிலே
வானம்புவியு மதிர்ந்திட பெற்றோர்கள்
வாய்விட்டழுவதை கேட்கலுற்றார் (கு)

ஐயா சுமாலி அதென்ன கூச்சலையா
அன்புடனே யெனைப்பெற்றோர்கள்
ஐயையோ கண்களிழந்தழும் காரணம்
அறிகிலேனென்றவன் தானழுதான் (கு)

மைந்தனைப் பார்த்தவுடனே—தாய் தந்தையா
மகனே கஜகேது இவ்விதமாய்
தொந்தரைசெய் தெங்கள் கண்ணைப்பிடுங்கியே
துரத்தி விட்டானிந்த கானகத்தில் (கு)

நாடு நகரமும் காணி நந்தேசம்—எங்கள்
நல்ல சுகத்தோடு நாடிருந்து
பாடு படுகிறோம் கானகந்தன்னிலே
பக்ஷமாயெங்களை ஆதரிப்பாய் (கு)

என்று பதமாக த்யுமத்சேனனும்
ஏங்கியழுது சொன்னவுடன்
அன்றே கஜகேது தன்னைப்பிடுங்கியான்
இப்பொழுது தங்கள் முன் கொண்டுவாரேன் (கு)

பழிக்கு பழிவாங்கியான் வருவேன்—அந்த
பாதகன் தேசத்தை கொள்ளை கொள்வேன்
அழித்தவன் கோட்டையுஞ் சேனைகளையும்
அதஞ்செய்து பாழாய் வருவே னென்றான் (கு)

சத்தியவந்தன் முனிவாலய—அவன்
தாய் தந்தையுமே மறுத்திடவே
இத்தருதி கஜகேதுவை கொன்று வாறேனென்று
இனி இல்லாக்கோப முடனுரைத்தான் (கு)

என்னமாய்ச் சொன்னாலும் சத்யவந்தன்கோபம்
எள்ளளவுந் தணியாததினால்
நன்மையாயெமக்கோரவரம் வேணுமென்று
நலமுடன் த்யுமத்சேனன் கேட்டானே (கு)

என்னவரமென்று சத்தியவன் கேட்க
எங்களை விட்டுப்பிரியாமல்
அன்புடன் ஆதரிப்பே னென்றுரைக்க
அப்பனே தந்தருளென் றுரைத்தார் (கு)

நல்லதென்று சத்யவந்த னிருக்கையில்
நலமுடனே சாவித்திரியும்
அல்லும் பகலும் காதல் மிகுதியால்
அலையலுற்றாள் விரக வேதனையால (கு)

மாலவி சேடிகளானோர்க்கு—தான்
மணாளனுக்குப்போது தான்புகல
சால்வபுரி சத்தியவந்தனை மணக்க
சம்மத மென்றிட்டாள் சாவித்திரியும் (கு)

நாரதரப்போது வந்திருந்தார்—அவள்
நமஸ்காரஞ் செய்தனள் சாவித்திரியும்
மடந்தையே தீர்க்க சுமங்கலியாகவே
மாங்கல்யா யிருவென் றாசீர் வதித்தார் (கு)

சாவித்ரி இஷ்டத்தை நாரதர்க்கப்போது
சாற்றினார் பெற்றோர்களன்புடனே
ஆயுள் ஒருவருடம் சத்யவந்தனுக்கு
அப்பாலிருக்க முடியாதென்றார் (கு)

நாரதர் சொன்ன மொழிகேட்டு—பெற்றோர்
நலிந்து விசனமடைந்தார்கள்
சீரதா யாசீர்வதித்த நின்வாக்கு
திரும்புமோ நாரதரே புகல்வீர் (கு)

சத்தியவந்தனைத் தான்தவிரயாரும்
மற்றோர் மணாளனை யான்விரும்பேன்
சத்திய மிதுவேயென்று சாவித்திரி
உத்தமி யன்புடன் சொல்லிவிட்டாள் (கு)

நாரதர் கேட்டு மனந்திகைத்து—அப்போ
நங்கை சாவித்திரிக் குபதேசம்
சீருடனே செய்த சமயத்திலே
சென்றார்கள் கானகமன்புடனே (கு)

காட்டில் பத்மாக்ஷி துயுமத்சேனனும்
கலங்கிவாழ்ந்திடுங் கோரமதை
கேட்டு அஸ்வபதி மாலவியும்
கெஜகேது பாவியை நிந்தித்தார் (கு)

ஐயா சால்வபுரியரசே—தாங்கள்
அன்புடன் பெற்றதோர் சாவித்திரியை
வையத்திலுன்மகன் சத்தியவந்தனுக்கு
வதுமை செய்வதற்கு சம்மதிப்பீர் (கு)

என்றிவர்கள் சொல்ல—துயுமத்சேனனும்
நன்றென சத்யவந்தனை தானழைத்து
குன்று மனதுடன் இருவருமாக
குடும்ப ரக்ஷகராயிருக்க (கு)

மணமது செய்திட அஸ்வபதியும்
மாலவியும் சுதேசம் சென்றார்
குணமுடன் சாவித்திரி சத்தியவந்தனும்
கொஞ்சிக் குலாவி மகிழ்ந்திருந்தார் (கு)

அல்லி அசோகு அழகு சாமந்தி
மல்லிகை முல்லை மனோரஞ்சிதமும்
சொல்லுதற்கரிய பலவித மலர்களும்
சொக்கிட மணக்க மனோமதி விமோக (கு)

## எமதர்மன்-கொலு.

பாபிகளின் குற்றத்தை சித்திராபுத்திரனால் கவனித்த எமன் தண்டிப்பது.

எமன்-தெம்மாங்கு.

உலகிலுள்ள மனிதர்களில் உண்மை நிலையில்லாத
கலகஞ் செய்த பாபிகளை காலதூதரே வரவழைப்பீர்

அலங்காரம்-அடடா.

சிங்கமுகனே சிறுத்தை வாயா செங்கண்ணனே நீலாவாடா
எங்குமுள்ள பாபிகளை இழுத்துக் கொண்டு வந்தாயோடா
சித்ராபுத்ரனை தீவிரமழைப்பீர் (நன்)

சித்ராபுத்ரன்—தெம்மாங்கு.

பராக்ரமுள்ள எமதருமா பாபிகளிதோ வந்தார்கள்
துராத்மா யிவன் கடகுடியன் துரோகியிவன் லேசிநேசன்

அலங்காரம்-ஐயா

கஷ்டப்படுத்தி மனிதர்களை காசுசேர்த்த பொல்லாபாவி
துஷ்டனிவன் சேஷ்டனிவன் துடுக்கனிவன்கொடியதுரோகி

எமன்-அலங்காரம்

இத்தகைய பாபிகளை இம்சை செய்து நரகினிலே
சித்ரவதை செய்திடுவீர் தீவிரமாய் தூதர்களே

அலங்காரம்.

அன்புடைய சித்ராபுத்ரா ஆயுள்முடிந்த ஜீவர்களில்
அவரவர்க்குதகுந்தவிதமாய் அமைத்ததண்டனை புரியசெய்வாய்

எமன் தெம்மாங்கு.

இன்னும் எவரெவர்கள் இருக்கின்றார் ஆயுள்முடிவாய்
பன்னுவா யெந்தனுக்கு பக்ஷமுள்ள சித்ரபுத்ரா (நன்)

அலங்காரம்-அடடா.

எத்தனை ஜீவர் இரந்தவர்கள் எத்தனைபேரிங்குவந்தவர்கள்
சித்ராபுத்ரா இனிவருவோரே சீக்கிரமாகவே சொல்லுவாய் நீ

சித்ராபுத்ரன்-தெம்மாங்கு.

சாலவபுரியரசன் சமர்த்தில்லா துயுமத்சேனன்
பாலன் சத்யவந்தனுக்கு பகரும் ஆயுள்முடிவாச்சையா

அலங்காரம்

இன்றைபகல் சத்யவந்தன் ஆயுள் எம்லோகம் வருகவேணுட
வண்மையுள்ள தூதரையேவி வரவழைத்துக்கொள்வீரையா

தெம்மாங்கு.

அப்படியா என்றுகட்டி அருகிலிருந்த தூதர்களை
அப்போதே சத்யவந்தன் ஆவியைக்கொண்டு வருவீரென்றார்

அலங்காரம்.

எமனுத்திரவைபெற்று எங்ஙனர்கள் தூதுவர்கள்
தாமதித்தார் சாவித்ரிகற்பின் தணலுக்கஞ்சி ஓடிவிட்டார்

தெம்மாங்கு

காலன்பதிக்கன்புடன் கையில் வீணையையேந்தி
சிலகுண நாரதரும் சிங்காரமாய் வந்துவிட்டார்.

அலங்காரம் ஐயா.

எமனைப்பார்த்து நாரதரும் இதமாகவே சொல்லுகிறார்
சத்யவந்தனை பிடிக்கவேண்டாம் உத்தமனே என்றுரைத்தார்

தெம்மாங்கு.

அவனியில் வாழ்மாந்தர்கட்கு ஆயுள்முடிந்தபின்பு
தவறாமலெமபுரிக்குத் தாவியே யழைத்துக்கொள்வோம்

அலங்காரம்-ஐயா.

சத்தியவந்னுக்காக நீரும் சகாயமாகபேசவேண்டாம்
உத்தமரே உபித்ததியே உமதிருப்பிட மேகுமையா

தெம்மாங்கு

காலனிவ்வாறுரைக்க கஞ்சனிடம் சொல்வோமென்று
சிலகுண நாரதரும் சென்றுவிட்டார் பிர்மலோகம்.

அலங்காரம்.

நான்முகனை கண்டு நாரதர் நமஸ்கரித்து சொல்லுகிறார்
தேன்மொழி சாவித்ரிகணவன் ஜீவித்திருந்திட செய்குவீர்

தெம்மாங்கு.

நாரதர் சொன்னமொழி நான்முகனுங்கேட்டுவிட்டு
கூறுவாராச்சமயம குற்றமில்லா பிர்மதேவன்

அலங்காரம்.

அவரவர்க்கு விதித்தாற்போல அந்தகனும் செய்வதாலே
தவறாது தலைவிதிதான் தப்புதற்கோர் மார்க்கமுண்டோ

தெம்மாங்கு.

கருணைதேவியை யனுப்பி காவலிட மனதிருத்தி
கருணைமே சத்யவந்தன் தான்பிழைக்க செய்யவேவாமென்றார்

அலங்காரம்-அப்போ.

காரதரும் சம்மதித்து நடந்திட்டார் வனத்தைதேடி
சீருடனே சத்யவந்தன் சிந்தைமகிழ்வாயிருந்தான்

தெம்மாங்கு.

சாவித்ரி சத்யவந்தனும் தனியாக வனத்தில் வந்தார்
ஆவிசோறு தென்றுயன்னன் அயர்ந்துமே படுத்திட்டானே

அலங்காரம்.

எமதர்மன் சத்யவானை எங்கி தடிக்க உயிரைபற்றி
பூம்பாசை மறக்கவேண்டி புனிதனே மன்செய்துவிட்டான்

தெம்மாங்கு.

சத்யவானுயிரை எமன் தான்பற்றும் வேளையிலே
உத்தமி சாவித்திரியும் ஓங்கியே யழுகலுற்றாள்.

அலங்காரம்.

சின்ன வயதிலென்னை யிக்கதியாய் செய்லாமோ ஐயா எமனே
அன்னிதமாயென்புருஷனை அன்புடனே தாருமென்றார்

தெம்மாங்கு

ஏனம்மா சாவிதரியே என்னையேன் தொடரலானல்
கானகத்தில் வருசவேண்டாம் கணவனுடலை தகனம்செய்வா

அலங்காரம்.

என்னுசொல்ல சாவித்ரியும் இணங்கவில்லை யென்மனது
என்னையும்தானழைத்துசெல்வீர் எனறழுதாள் சாவித்ரியும்

எமன்-தெம்மாங்கு

உன்வார்த்தை கேள்வியுற்ற உருகுதம்மா என்மனது
நன்மையாய்மேவார் வரத்தை கேட்பாய் நான்தருவேன் என்
றுரைத்தான்.

அலங்காரம்-ஐயா,

எனது மாமன்மாமி கண்கள் தெரியும்படி வரந்தாயென்றாள்
-னதுமனதின்படியேகண்கள் உத்தமியே தெரியும்போவாய்

தெம்மாங்கு.

ஆஹா எமதருமன் ஆளனுயிரைவிடாமல் ஓஹோயெங்கே
யோபோனார் ஓடோடியான் பின்தொடர்வேன்

அலங்காரம்-ஐயா.

எங்கே போறீர் எமதருமரே    எனது நாதன் உயிரைதாரும்  
என்றுகேட்க எமன் திகைத்து    ஏதேனும் வரம்கேட்பாயென

தெம்மாங்கு.

பாவி கஜகேது எந்தன் மாமன் மாமி ராஜ்ஜியத்தை  
தாவியே பரித்துகொண்டார் தரவேணுமெமது ராஜியம்

அலங்காரம்-ஐயா.

என்று கேட்க எமன் மகிழ்ந்து    நன்றென வரந்தந்துமறைந்து  
சென்றுவிட்டார் சாவித்ரியும்    தேடிக்கொண்டு பின்தொடர்ந்

தெம்மாங்கு

நான்கொடுத்த வரத்தைப்பெற்று நகரை நாடி நடந்திடாமல்  
ஏனம்மா சாவித்ரியே என்பிறகே ஓடிவாருய்

அலங்காரம்-ஐயா

எனது கனவனுயிரைதாரும்    என்றுகேட்க எமன்திகைத்து  
இதைதவிர ஓர் வரத்தைகேட்பாய்    இன்பமாக தருவேனென்றார்

தெம்மாங்கு.

ஐயாயெனைபெற்றோர்க்கு ஆண்குழந்தை தருவீரென்று  
வையம்புகழ் எமதருமன மலரடிக்கு தெண்டனிட்டாள்

அலங்காரம்-அம்மா.

அப்படிக்கே வரங்கொடுத்தேன்    அன்புடனே செல்வாயென்று  
அக்ஷணமே எமன மறைந்தார்    அத்திசை சாவித்ரிதொடர்ந்து

தெம்மாங்கு.

ஐயனே எனமணாவன ஆவியைக்கொடுததேகுவீர்  
வையமிலே யுமதருளால் வாழ்ந்திருப்போம் தருமதேவா

அலங்காரம்.

ஏனம்மா இத்தனை தூரம்    எனபினனே தொடர்ந்துவந்தாய  
ஏதேனும் ஓர்வரத்தைகேட்பாய்    இப்பொழுதே தருவேனென்றார்

தெம்மாங்கு.

மைந்தனவரமெந்தனுக்கு தந்திடுவீரென றுகேட்டாள்  
சுந்தரியே உந்தனுக்கு மைந்தனவரந்தந்தேனெனறார்

அலங்காரம்.

புத்திரவரத்தைத்தந்தீர்    புனிதரே எனபுருடனையும்  
சித்தமகிழ்வாயெழுப்பிநீரும்    சீருடனே தருவீரெனறாள்

தெம்மாங்கு.

அப்படியே நல்லதென று அனபுடனே எமதருமன  
செப்பரிய சத்யவந்தனை ஜீவனுடனெழுப்பலானார்

கும்மிச்சிந்து.

சாவித்ரியம்மன் பக்தியினல்
சத்தியவந்தனை தானெழுப்பி
ஆவியுடனே ஜீவித்திருந்திட
ஆண்டவன் கிருபைசெய்தாரே (கு)

இவ்விதமாகவே சதிபதியும்
இன்பமுடனே வாழ்ந்திருக்க
செவ்விழி பெற்றோற்கு தான்தெரிந்து
செல்வ மருமகளைதான்பார்த்து (கு)

மாலவி ஆண்மகவைப்பெற்று
மணாளன் அஸ்வபதியுடனே
சாலவே நன்ருய் வாழ்ந்திருந்தார்
சந்தோஷமாகவே எப்போதும் (கு)

சாவித்திரியம்மன் சரித்திரத்தை யன்பாயெழுதிவைத்து பூவில் ஜீவித்திடும் உத்தமர்கள் ஆவியுளமட்டும் வாழ்ந்திருப்பார்கள் மங்களம் ! மங்களம் ! மங்களம்.



முற்றிற்று.

உ

கணபதி துணை.

பதிவிரதா அல்லது (நளதமயந்தி) என்னும் புஸ்தகம் தயா ராகி வருகிறது கூடிய சீக்கிரம் வெளிவரும்,



எமது விலாசம்,

**என். டி. சிகாமணி;**

புஸ்தகவியாபாரி,

நெ. 12, அருணாசலமுதலி வீதி சென்னை,